அதே மாதிரித்தான் யுனிவர்ஸிட்டியும் முடிவெடுக்கும் என்று சொல்லிக் கொண்டு, கிளர்ச்சிக்கு எந்தவிதமான அவசியமும் இல்லை, இந்த அட்ஜெர்ன்மெண்ட் மோஷனுக்கும் அவசியமில்லை, இதை அரசியல் கிளர்ச்சியாக ஏற்படுத்தி விடக்கூடாது, கல்விச்சாலைகளில் உள்ள நல்ல சூழ் நிலையை இதன் மூலம் கெடுத்து விடக்கூடாது என்று எல்லோருக்கும் எனது தாழ்மையான வேண்டுகோளை சமர்ப்பித்துக் கொண்டு இந்த விவாதத்திற்கு அவசியம் இல்லை என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM: ஜனசக்தி என்ன எழுதியிருக்கிறது என்று பரிசீலனை செய்வதற்கு நான் தயாராயிருக்கிறேன். கம்யூனிஸ்ட் கட்சியைச் சம்பந்தப்பட்ட மட்டில் ஒரு உடன்பாட்டிற்கு சம்மதம் தெரிவித்து விட்டு அதிலிருந்து மீறுவது என்பது இராது. உடன்பாடுபடிதான் நடப்போமே தவிர கட்சி நலனுக்காகக் கூட உடன்பாட்டை மீறமாட்டோம் என்று நிச்சயமாக தெரிவிக்கமுடியும். அமைச்சர் அவர்களின் பதிலில் 40% என்று உத்தரவு போடவில்லை என்று சொன்னார்கள். இவ்வளவு மார்க்குதான் வாங்க வேண்டுமென்று சொல்லிவிட்டால் இதை வற்புறுத்தவில்லை.

THE HON. SRI C. SUBRAMANIAM: இது, சர்க்கார் முடிவு செய்வதல்ல, யுனிவர்ஸிட்டி முடிவு செய்வது. இவ்வளவுதான் என்று சொல்லிவிட்டால் உடனே யுனிவர்ஸிட்டி விவகாரத்தில் சர்க்கார் தலையிடுகிறது என்று வந்து விடும். அவர்கள் செய்யும் முடிவு, மாணவர்களுக்கு பாதகமில்லாத முறையில் செய்வார்கள் என்ற பூர்ண நம்பிக்கை எனக்கிருக்கிறது. அதை ஓரளவு தெரிந்துதான் சொல்கிறேன் என்பதால் இதை மேலும் வற்புறுத்த வேண்டியதில்லை. எந்தப் பாடமாகயிருந்தாலும் படிக்க வேண்டுமென்ற சூழ்நிலையை ஏற்படுத்தவேண்டும். ஒரு பாடம் வேண்டாமென்றால் படிக்கவேண்டியதில்லை, ஒரு பாடம் வேண்டுமென்று வைத்தபிறகு அதைப் படித்துத்தான் ஆக வேண்டுமென்ற சூழ்நிலையை ஏற்படுத்த வேண்டும். மார்க் ஒன்றும் வாங்க வேண்டியதில்லை என்றால் அதை படிப்பதை நிறுத்திவிடுவார்கள் என்பதில் சந்தேகமில்லை. ஆகவே, எந்தவித முடிவு எடுக்கவேண்டுமென்பதை யுனிவர்ஸிட்டிக்கு விட்டு விட வேண்டும். காலேஜுக்கு போக எவ்வளவு மார்க் வாங்கவேண்டுமென்று செய்வது அவர்கள் செய்யவேண்டியது. அது மாணவர்களுக்கு பாதகம் விளைவிக்காத வகையில் இருக்கும் என்று சொல்லிக்கொள்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM: யுனிவர்ஸிட்டி முடிவு எடுக்கவில்லை என்று அமைச்சர் அவர்கள் சொல்வதாலும், அப்படி எடுக்கும் முடிவால் மாணவர்களுக்கு பாதகம் ஏற்படாது என்று கூறுவதாலும், அடுத்த கூட்டத்தில் இந்த விஷயம் முதல் அமைச்சர்கள் மகாநாட்டில் வரயிருப்பதாலும் இதை நான் வற்புறுத்தவில்லை.

DEPUTY SPEAKER: The Hon. Leader of the House has stated so clearly that Government have no responsibility in the matter. On the basis of such a statement from the Hon. Leader of the House, I do not think there is any necessity for me to give my ruling.

SRI M. KALYANASUNDARAM: I am not pressing, Sir.

## III.—ANNOUNCEMENTS.

### (1) BILLS PASSED BY THE COUNCIL.

DEPUTY SPEAKER: I have to announce to the House that the following Bills have been passed by the Legislative Council without any amendments :—

(1) The Madras Pawnbrokers (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 30 of 1960).

31st August 1961] [Deputy Speaker]

(2) The Madras Cultivating Tenants Protection and Payment of Fair Rent (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 28 of 1961).

(3) The Madras Tenants and Ryots Protection (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 29 of 1961).

(4) The Holdings (Stay of Execution Proceedings) (Madras Amendment) Bill, 1961 (L.A. Bill No. 24 of 1961).

(5) The Madras Cultivating Tenants Protection (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 30 of 1961).

## IV. PRESENTATION OF THE REPORT OF THE COMMITTEE OF PRIVILEGES

SRI V. S. MANIKKASUNDARAM : I present to the House the report of the Committee of Privileges on 'The Mail' case which was referred to it.

## V.—GOVERNMENT BILLS.

### (1) THE MADRAS APPROPRIATION (NO. 5) BILL, 1961 (L.A. BILL NO. 36 OF 1961).

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

"That the Madras Appropriation (No. 5) Bill, 1961 (L.A. Bill No. 36 of 1961) be taken into consideration."

DEPUTY SPEAKER : Motion moved—

'That the Madras Appropriation (No. 5) Bill, 1961 (L.A. Bill No. 36 of 1961) be taken into consideration."

SRI M. KALYANASUNDARAM : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவை நான் ஆட்சேபிக்கவில்லை, ஆதரிக்கத்தான் போகிறேன். இருந்தாலும் இதன்மீது சில கருத்துக்களைத் தெரிவிக்க விரும்புகிறேன். நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் இதற்கு முன்னால் பேசிய பேச்சை ஒட்டி வரக்கூடிய சில கருத்துக்களைத் தெரிவிக்கலாம் என்றுதான் இப்போது நிற்கிறேன். இந்த மசோதாவின்மீது எதுவுமே பேசாமல் இந்த மசோதா நிறைவேறியிருக்கவேண்டியது. இதில் முக்கியமாக வெள்ளம் சம்பந்தமாகவும், இதற்கு நிவாரணம் கொடுப்பது சம்பந்தமாகவும் நான் சில யோசனைகளை இந்த சபையில் கூறியிருக்கிறேன். அவைகள் அவ்வளவு முக்கியமல்ல என்கிற காரணத்தாலோ, அல்லது இதைவிட பல முக்கியமான பிரச்னைகள் இருந்தன என்கிற காரணத்தாலோ என்னவோ அமைச்சர் அவர்கள் இதற்குப் பதில் சொல்லவில்லை. நிவாரணம் அளிக்கக்கூடிய விஷயத்தில், குறிப்பாக, நகரப்புறத்தில் அதிலும் திருச்சி நகரத்தில் வீடு இழந்த மக்களுக்கு உதவி செய்து கொடுக்கவேண்டும் என்று சொல்லியிருந்தேன். அதைப் பற்றி அமைச்சர் அவர்கள் ஒன்றும் சொல்லவில்லை என்றாலும், இதைப் பற்றி உடனடியாக கவனிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதேபோன்று அமைச்சர் அவர்கள் காவேரித் தண்ணீர் பிரச்னை சம்பந்தமாக பல கருத்துக்களை சொன்னார்கள், அவர்கள் சொன்ன கருத்துக்களில் எனக்கு உடன்பாடுதான். மைசூர் ராஜ்யத்திலுள்ளவர்களும், தமிழ்நாட்டிலுள்ளவர்களும் வேறு வேறு பிரச்னைகளை வைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்று கற்பனை செய்வது கூடாது என்பதுதான் என் அபிப்பிராயமும். காவேரிக்கு மேட்டூரில் நாம் அணை கட்டிய